# ஸ்ரீ நாராயண தீர்த்தர்

(சிரோமணி, வித்வான் & ஸங்கீதம் இசை ஆராய்ச்சியாளர்
T. G. அனந்த சுப்ரமண்யம், ஸரஸ்வதி மஹால் தஞ்சாவூர்.)

கலியில் தர்மம் மறைந்து அதர்மம் மேலோங்கி பாபகார்யங்களால் ஜனங்கள் வருந்த நேரிடும். நற்கார்யம் செய்ய மனம் இடங் கொடுக்காது. மக்கள் வீணை கவலைகளுக்கும், ஹிம்ஸைகளுக்கும் ஆளாகி கஷ்டமடைவார்கள். யாகம் முதலிய கர்மாக்கள் பயனற்றதாகும்: ஆகையால் பகவான். "கலௌ கல்மஷசித்தானும் பாபத்ரவ்யோப ஜீவினும், விதிக்ரியா விஹீனனும் கதிர் கோவிந்த கீர்த்தனம்" என்றும் "கலௌ ஸங்கீர்த்ய கேசவம்" என்றும் கூறுகிறார். கலியில் கேசவனைத் தியானம் செய்வதைத் தவிர வேறு ஸாதனம் கிடையாது மோக்ஷமடைவதற்கு. பகவானைத் தியானம் செய்யப் பல வழிகள் இருந்தாலும் பாமர, பண்டிதர்கள் எல்லோரும் செய்யக் கூடியது நாம ஸங்கீர்த்தனம் ஒன்று தான்.

ஏனெனில் நாமகீர்த்தனத்திற்கு ஆசாரம், காலம் முதலிய நிபந்தனைகள் அவ்வளவாகத் தேவையில்லை. அவரவர்கள் இஷ்டப்படி; முடிந்தவரையில் நாமஸங்கீர்த்தனம் செய்யலாம் அதுவே இக்கலியில் நாம் இறைவனையடைய வழியாகும்.

கடவுளைத் துதிக்க ஜாதி, மத, மொழி முதலிய பாகுபாடு கிடையாது. "மத்பக்தாঃ யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி நாரத" என்று ஸ்ரீ நாராயணன் கூறுகிறார். ஆகையால் நாம ஸங்கீர்த்தனத்தை இசையுடன் ஆடி, பாடினால் பகவான் ஸந்தோஷமடைந்து பக்தர்களுக்கு அருள்செய்வார். பகவானை வழிபட கலியில் நாமஸங்கீர்த்தனந்தான் மேன்மையானது—சுலபமானது.

நாம ஸங்கீர்த்தனம் எப்படிச் செய்வது? என்று வினா எழுகிறது. அதற்கு அவ்வப்பொழுது பகவான் தன் அம்சமாக ஞானிகளையும் பாகவதோத்தமர்களையும் நமக்கு அளிக்கிறார். அவர்கள் பகவந்நாமாவை மிகச் சுலபமாகச் சொல்லவோ, தியானிக்கவோ வழி வகுத்துக் கொடுக்கிறார்கள். அவைகளைப் பின்பற்றி நாம் வழிபட வேண்டும். அத்தகைய மகான்கள் எவ்வளவோ இருந்தனர்.

11 - ம் நூற்றாண்டில் "ஜயதேவர்" என்ற பாகவதோத்தமர் "கீத கோவிந்தம்" என்ற காவ்யத்தை எழுதி நமக்

களித்துள்ளார். அக்காவ்யம் "அஷ்டபதி" என்ற பெயரால் பாகவதோத்தமர்களால் மிகவும் பூஜிக்கப்பட்டு வருகிறது. ராதைக்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் ஏற்பட்ட அன்பின் வடிவமேயாகும் இந்த காவ்யம். ஜீவாத்மைக்யத்தை வைத்துப் பின்னப்பட்டது. இதே போல் வெகு காலத்திற்குப் பின் கிருஷ்ணனின் லீலைகளைச் சிறு பாட்டுக்களாகவும், கத்யங்களாகவும், சிறு தருக்களாகவும் கீர்த்தனைகளாகவும் அமைத்துலகு காவ்யமாகத் தந்துள்ளார் மகான் ஸ்ரீ நாராயண தீர்த்தர்.

இவர் ஆந்திர ப்ரதேசத்திலுள்ள குண்டூர் ஜில்லாவில் மங்களகிரி க்ஷேத்ரத்தின் சமீபமுள்ள "கானூர" என்னும் ஊரில் ஓர் அந்தணர் குலத்தில் உதித்தவர் இவர். *கி. பி. 1675 லிருந்து 1745 வரை வாழ்ந்து வந்தவர். என்று தெரிகிறது.

இவர் வீட்டின் பெயர் "தில்லவத்ஞல" என்பது இவரின் பூர்வாச்ரமப் பெயர் கோவிந்த சாஸ்திரி என்பதாகும். கோவிந்தர் சிறு வயதிலிருந்தே ஸ்ரீ கிருஷ்ணனைப்பற்றி ஆடிப்பாடி மகிழ்வார். கோவிந்தர் கல்வி கற்பதற்காக ஸ்ரீ வாஸுதேவ சாஸ்திரி என்பவரை அடைந்து பன்னிரண்டு ஆண்டுகள் ஸாங்கோபாங்க வேதாத்யயனம் செய்தார். பின் "வேதாத்திரி" என்ற இடத்திற்குச் சென்று இடைவிடாமல் பன்னிரண்டு ஆண்டுகள் யோக நிஷ்டையில் அமர்ந்தார்.

யோக நிஷ்டையிலிருந்துவிட்டு காசிக்குச் சென்று "ஸ்ரீ ராமானந்தர்" என்பவரின் சிஷ்யராக ஆனார். காசிக்குச் செல்லும் முன் தன் குடும்ப பாரத்தை தன் தமையன் குமாரனிடம் ஒப்படைத்துவிட்டுப் புறப்பட்டார் என்று தெரிகிறது.

காசியிலிருந்து திரும்பி தென்னிந்தியாவிற்கு விஜயம் செய்து கோதாவரி ஜில்லாவிலுள்ள "குச்சி மஞ்சி" என்ற அக்ரஹாரத்தில் மூன்று ஆண்டுகள் தங்கியிருந்தார். (பசலி 1154 முதல் 1157) கி. பி. 1715 என்று சுமாராகக் கூறலாம். சிலர் கி. பி. 1500 - ல் வாழ்ந்தவரெனக் கூறுகிறார்கள். இவர் காலம் ஆராய்ச்சிக்குரியது.

பிறகு கிருஷ்ணா நதிக்கரையிலுள்ள "வெள்ளத்தூர்" என்ற இடத்தில் சில ஆண்டுகள் தங்கி அங்கேயே "ஸ்ரீ கிருஷ்ண லீலாதரங்கிணீ" என்பதை இயற்றினார் இது ஓர் இசைக் காவ்யமாகும். லகுகாவ்ய வகையில் சேர்ந்தது எனலாம். இதைப்

* History of classical Sanskrit Literature By M. Krishnamachari

பல ராக - தாளங்களில் கீர்த்தனைகளாக அமைத்து அநேக சிஷ்யர்களுக்குப் பயிற்றுவித்தார்.

ஸ்ரீ நாராயண தீர்த்தர் தென்னிந்திய விஜயத்தை மேலும் தொடர்ந்து நடத்தினர். அவ்வமயம் திருமலை ஸ்ரீ வெங்கடேசப் பெருமானை தெரிசனம் செய்து பிறகு "வரகூர்" வந்து சேர்ந்தார். இவ்வூருக்கு "வராஹபுரம்" "பூபதிராஜபுரம்" என்று இரண்டு பெயர்கள் உண்டு. அந்த ஊரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வெங்கடேசப் பெருமானை ஸ்ரீ தீர்த்தர் தன் கிருதியில் நாட்டை ராகதரங்கத்தின் அனுபல்லவியில் "ஜய! ஜய! வராஹபுரி ஸ்ரீ வெங்கடேச ஜய! ஜய!" என்று பாடியுள்ளார்.

## காசியில் நடந்தது

ஸ்ரீ தீர்த்தர் காசியிலிருக்கையில் தினமும் கங்கைக்கு நீராடச் செல்வது வழக்கம். அப்பொழுது அவரிடம் சந்தன மணம் வீசும். இதனைச் சிலர் சந்தேகங் கொண்டு அவர்மேல் குறை கூறினார்கள். இவ்விஷயத்தை அறிய ஆவலுள்ள அக்கயவர்கள் ஓர் இரவு அவர் வீட்டுக் கூரையின்மேல் நின்று பார்க்கும் பொழுது ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவர் பாடும் பாட்டிற்குத் தகுந்தபடி நடனம் ஆடுவதைப் பார்த்துத் திகைத்து; உடனே தீர்த்தரிடம் மன்னிப்புக் கேட்டு சிஷ்யரானார்கள்.

## ஸ்ரீ தீர்த்தரின் ஈகை

காஷ்மீர் தேசத்துப் பண்டிதர் ஒருவர் பல வித்துவான்களை வென்று வாகைசூடி வந்தார். ஆனால் அப்பண்டிதர் ஸ்ரீ நாராயண தீர்த்தரின் பெருமையைக் கேட்டு அவரிடம் ஓர் நற்சான்றிதழ் வாங்கிக் கொள்ள வேண்டுமென நினைத்து; ஸ்ரீ தீர்த்தரிடம் வந்தார், பண்டிதர் அபிப்பிராயம் அறிந்த ஸ்ரீ தீர்த்தர் அவருக்குச் சான்றிதழ் அளித்தார். அதை வைத்துக் கொண்டு ஊரையும், அரசனையும் ஏமாற்றி வந்தார். ஒரு நாள் இப்பண்டிதரை. கௌரவித்து அவ்வரசன் யானைமேல் ஊர்வலம் விடச் செய்தான் அவ்வமயம் அங்கு வந்த ஸ்ரீ தீர்த்தரின் சிஷ்யர்கள் அப்பண்டிதரைப் பல கேள்விகளால் மடக்கி அவ்விருதுகளையும் நற்சாக்ஷிப் பத்திரங்களையும் பெற்றுக் கொண்டு தன் குருநாதரிடம் கொடுத்தார்கள். ஸ்ரீ தீர்த்தர் அவ்விருதுகளையும், மற்றவைகளையும் அப்பண்டிதரிடமே கொடுத்துவிடுங்கள் நமக்கு இவைதேவையில்லை யென்றார் இவைகளைக்கேட்ட அப்பண்டிதர் ஸ்ரீ தீர்த்தரின் ஈகையைப் புகழ்ந்து அவருக்குச் சிஷ்யரானார்;

## ஸ்ரீ கிருஷ்ண லீலாதரங்கிணியின் மகிமை

இவ்விதம் ஸ்ரீ தீர்த்தர் பல இடங்கள் சுற்றி கடைசியில் தஞ்சை ஜில்லாவிலிருக்கும் வரகூருக்கு வந்த பொழுது அவ்வூர் மக்கள் அவரை வரவேற்றனர். அவ்வூரில் கிருஷ்ண லீலா தரங்கிணியைப் பாடி ஸ்ரீனிவாஸ பெருமாள் ஸந்நிதியில் ஸ்ரீ ருக்மிணீ கல்யாணம் செய்தார்,

அங்குள்ள ஸ்ரீனிவாசப் பெருமாள் ஸ்ரீ ருக்மிணீ ஸமேத ஸ்ரீ கிருஷ்ணனுக மாறி எல்லோருக்கும் காக்ஷியளித்தார்,

மேலும் தான் செய்த தரங்கிணீயை பகவான் ஏற்றுக் கொண்டாரா என்பதையறிய தான் பூஜித்து வந்த ஸ்ரீனிவாஸப் பெருமாளைச் சுற்றித் திரையினுல் மறைத்து தாம் வெளியில் நின்று பாடினுர் பகவான் தரங்கிணிக்கு ஏற்றபடி நர்த்தனம் செய்யும் ஒலி கேட்டது. ஸ்ரீ தீர்த்தர் பகவான் நம் கிருதிகளை அங்கீகரித்து அருளிவிட்டாரென மகிழ்ச்சியடைந்தார். சில பாட்டுக்கள் பாடும் பொழுது சதங்கையொலி கேட்காததால் அப்பாட்டுக்களை ஒதுக்கிவிட்டாரெனவும் கூறுவர் ஸ்ரீ தீர்த்தரின் தரங்கிணீ பகவத் ஸம்மதமென்று இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அவ்விதம் ஸ்ரீ கிருஷ்ணனே அனுபவித்துள்ளார் என்ருல் தரங்கிணியின் பெருமையை எவ்விதம் கூறுவது!

## கனவில் கண்ட காக்ஷி

கருணுநிதியான பகவான் தீர்த்தரின் கனவில் தோன்றி ஏ - அன்ப! கீழ்த்திசையில் கொஞ்ச தூரத்திலுள்ள "புஷ்பவன"* மென்னும் திருப்பூந்துருத்தி என்ற நகருக்குச் செல்வாயாக அங்கு ஓர் மாமரமுள்ளது; அதன் அடியில் யோகம் செய்து கொண்டு வா என்று பணித்தார். அம்மரம் இன்றும் வானளாவி வளர்ந்து நின்று காக்ஷியளிக்கிறது. அம்மாமரத்தடியில் அநேக அற்புத நிகழ்ச்சிகள் நடந்தன.

(திருப்பூந்துருத்தி தஞ்சாவூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு 8 மைல் தொலைவிலுள்ளது).

## ஆட்டிடையனுக் கருள்செய்தது

ஒரு நாள் ஒரு ஆட்டிடையன் அக்கானகத்தில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தான். ஒருவன் மேய்ந்து கொண்டிருக்

கும் ஆட்டை அவனிடம் விலைக்குக் கேட்டான். இடையன் கேட்ட விலைக்குச் சம்மதமில்லாமல் கொடுக்க மறுத்துவிட்டான், வாங்க வந்தவன் தன் சக்தியால் ஆட்டை இறக்கும்படிச் செய்துவிட்டான். இறந்த ஆட்டை எடுத்துக் கொண்டு வருந்தி இடையன் அவ்வழியில் மாமரத்தடியில் யோக நிஷ்டையில் இருக்கும் ஸ்ரீ தீர்த்தரிடம் வந்து சேர்ந்தான்; ஸ்ரீ தீர்த்தர் எல்லாவற்றையும் ஞான திருஷ்டியால் அறிந்து ஆட்டைப் பிழைக்க வைத்தார். பிழைத்த ஆடு இடையனுடன் போக விரும்பாமல் ஸ்ரீ தீர்த்தரையே சுற்றி வந்தது. இடையன் இச்செயலைப் பார்த்து வருந்தி மனங்கலங்கினன், ஸ்ரீ தீர்த்தர் அவனுக்குக் கைப்பிடி மண்ணை அள்ளிக் கொடுத்து வீட்டிற்குச் சென்று பார்க்கவும்; நடுவில் திறந்து பாராமல் செல்லவும் என்றார். இடையன் ஸ்ரீ தீர்த்தர் சொன்னபடியே வீட்டிற்குச் சென்று பார்த்தான். அதில் ஆட்டின் விலைக்குத் தகுந்த பணம் இருப்பதைக் கண்டு ஆச்சர்யமடைந்து மகிழ்ந்தான்.

## பொய் மெய்யானது

ஒரு நாள் சில துஷ்டர்கள் சேர்ந்து ஸ்ரீ தீர்த்தரைப் பரீக்ஷிக்க நினைத்து உயிரோடுள்ள ஒரு மனிதனை இறந்துவிட்டதாகக் கூறி "இவனைத் தாங்கள் உயிர்ப்பித்துத் தரவேண்டுமெ"ன பணித்தார்கள். ஞானக் கண்ணால் அறிந்த ஸ்ரீ தீர்த்தர் துஷ்டர்களுக்குப் பாடம் கற்பிக்க நினைத்து; குழந்தைகளே! என்ன செய்வது? இறந்தவரைப் பிழைப்பிக்க வைக்க முடியுமா? இறந்தவர் இறந்தவர் தான் உயிர்ப்பிக்கச் செய்வது இறைவனால்கூட முடியாதே! என்றார். உடனே அம்மனிதனை தொட்டுப் பார்த்தால் உண்மையாகவே உயிர் நீத்திருந்தான், துஷ்டர்கள் தலை குனிந்து சென்றார்கள். பொய்யாக இறந்தவன் மெய்யாகவே ஆனான்.

## அரசனுக் கருளிய அடிகள்

ஓர் ஏழை அந்தணன் தன் வருமை நீங்க ஸ்ரீ தீர்த்தரை அடிபணிந்து ப்ரார்த்தித்தான். ஸ்ரீ தீர்த்தர் அப்பனே! நான் ஒரு பச்சிலை தருகிறேன்; அதை இவ்வூர் அரசனிடம் கொடு: அரசன் அப்பச்சிலையால் தன் நோய் தீரப் பெற்று உனக்கு வேண்டியதைக் கொடுப்பான் பெற்றுக் கொள் என்றார், அவ்வண்ணமே அந்தணர் செய்ய அரசன் தன் நோய் நீங்கப் பெற்று அந்தணனை நோக்கி இப்பச்சிலை எங்கு கிடைத்தது என்று வினவினன். அந்தணன் நடந்த வரலாற்றைக் கூறினன். அரசன் உடனே ஸ்ரீ தீர்த்தரைக் காணவந்தான். ஸ்ரீ தீர்த்த

ரைப் பார்த்து வணங்கி, மனங் குளிர்ந்து, என்னைக் காத்த கருணாநிதியே! தங்களுக்குத் திருக்கோயில் ஒன்று நிர்மாணித்துத் தர விருப்பமுள்ளவனாக இருக்கிறேன். தாங்கள் அதற்கு திருவுளம் தந்து அருள வேண்டுமென்று கேட்டான். மேலும் அதை எங்கே! எவ்வளவு பரப்பில் கட்டப்பட வேண்டுமென்பதையும் கூற வேண்டுமென ப்ரார்த்தித்தான். அரசனின் ஸந்தேகம் தீர்ப்பதற்கு ஸ்ரீ தீர்த்தரின் அருள்பெற்ற ஆடு ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சுற்றி வலமாக வந்தது. அவ்விஸ்தீர்ணத்திலேயே அரசன் திருக்கோயிலை யமைத்துத் தந்தான். அதேபோல் ஸ்ரீ தீர்த்தரின் உருவத்தைச் சைத்ரிகனைக் கொண்டு எழுதச் சொல்லி அக்கோவிலின் முகப்பிலேயே வைத்தான், அவ்வுருவத்தை இன்றும் காணலாம்.

## ஸ்ரீ தீர்த்தரின் அமானுஷ சக்தி

ஸ்ரீ தீர்த்தருக்கு முன் வினைப்பயனால் வயிற்று வலி உண்டாயிற்று. அவர் தன் பயனை நினைத்து வாழ்ந்து வந்தார். ஒரு நாள் அரசன் வந்த பொழுது, ஸ்ரீ தீர்த்தர் ஒரு புல்லை எடுத்து அப்புல்லில் வயிற்றுநோயை ஆவாஹனம் செய்தார். அந்தப்புல் துடித்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து அரசன் இந்தப் புல் ஏன் இப்படி துடிக்கிறது என்று கேட்க, ஸ்ரீ தீர்த்தர் என் வினைப்பயனின் உருவான வயிற்று வலியைத் தங்கள் வருகையை முன்னிட்டு இதில் ஆவஹித்துள்ளேன் ஆகையால் இப் புல் வயிற்று நோயின் காரணத்தால் துடிக்கிறது என்றார். அரசன் ஆச்சர்யமடைந்து வியந்தான்.

## பிள்ளைப் பேறளித்த பெருமை

தொண்டைமண்டல வேளாளர் குலத்தைச் சேர்ந்த அன்பர் ஒருவர் வெகு நாள் பிள்ளைப் பேறு இல்லாமல் வருந்தி ஸ்ரீ தீர்த்தரிடம் வந்து தன் குறையைச் சொன்னார். ஸ்ரீ தீர்த்தர் அவருக்கருள் பாலித்துக் கூறினார். உனக்கு மூன்று பிள்ளைகள் பிறப்பார்கள்; அவர்களில் மூன்றாவது பிள்ளை சடைமுடியோடு பிறக்கும்; அதை எமக்குத் தொண்டு செய்யத் தருவாயாக! அவ்வாறே அவ்வேளாளர் சடைமுடியோடு கூடிய பிள்ளையை ஸ்ரீ தீர்த்தருக்குத் தொண்டு செய்ய அனுப்பி வைத்தார்,

அப்பிள்ளை குழந்தைக்கு ஸ்ரீ தீர்த்தர் தன்னிடம் வளர்ந்து வரும் ஆட்டின் பாலைக் கொடுத்துப் போஷித்துத் தனக்குச் சிஷ்யனாக்கிக் கொண்டார், என்று ஓர் வரலாறு.

இவ்விதம் பல அமாநுஷ லீலைகளைச் செய்த பெரியாரான ஸ்ரீ நாராயண தீர்த்தர் திருப்பூந்துருத்தியில் மாசி மாதம் சுக்ல பக்ஷம். அஷ்டமிதிதி, கார்த்திகை நக்ஷத்திரம் குருவாரம் கூடிய புண்ய சுப தினத்தில் மெய்யன் பர்களும், பக்தர்களும், சிஷ்யர் களும் புடைசூழ்ந்து நாமபஜனை செய்ய . ஆலய கர்ப்பக்ரஹத் துள் இறங்கி சமாதி நிஷ்டையையடைய சிறிது நேரத்திற்கெல் லாம் ஒரு ஜோதி தோன்ற எல்லோரும் கை கூப்பி தெரி சனம் செய்து மகிழ்ந்தார்கள்.

## ஜீவ ஸமாதியின் பெருமை

அன்பர்கள், தங்கள் இஷ்டபூர்த்திக்காக பலவித ப்ரார்த் தனைகளைச் செய்வதும், காவடி முதலியவைகள் எடுப்பதும், முடியிறக்கி உபநயன முதலிய கர்மாக்களையும், ஏழை, எளிய வர்களுக்கு அன்னதானம் செய்தும், ஒவ்வொரு குருவாரமும் நாமபஜனைகள் செய்தும் வருகிறார்கள் ப்ரதி மாதம் பௌர்ணமி யில் விசேஷ ஆராதனை பூஜைகளும் நடைபெற்று வருகின்றன.

ப்ரதி வருஷம் மாசி மாதம் சுக்லபக்ஷம் அஷ்டமி திதி தினம் மகானின் ஆராதனையும் பூஜையும் நடைபெறும். அவ் வமயம் பல பண்டிதர்களின் சொற்பொழிவுகளும் ஸங்கீத கச் சேரிகளும், கதாகாலக்ஷேபங்களும், பிராம்மண ஸந்தர்பனை களும், மகேச்வர பூஜை முதலியவைகளும் நடைபெறும், ஆஸ் திக மெய்யன்பர்கள் பலரும் கலந்து கொண்டு ஸ்ரீ நாராயண தீர்த்தரின் ஜீவஸமாதியைத் தெரிசனம் செய்து கிருதார்த்தர் களாக வேண்டுமென விரும்புகின்றனம்.

## ஸ்ரீ தீர்த்தர் செய்த கிருதிகள்

ஸ்ரீ தீர்த்தர் ஸ்ரீ கிருக்ஷ்ணலீலா தரங்கிணியைத் தவிர வேறு சில க்ரந்தங்களும் செய்துள்ளனர்.

1. சாண்டில்ல பக்தி ஸூத்ர வ்யாக்யானம்
2. பக்த்யாதி கணமாலா
3. ஹரி பக்தி சுதார்ணவம்
4. ஹரி பக்தி சுதோதயம்
5. பாரிஜாதாபஹரணம்

கடைசியில் சொல்லப்பட்ட க்ரந்தம் யக்ஷகானமாகும். இது தெலுங்கு காவியம். தற்சமயம் தஞ்சை ஸரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் காணப்படுகிறது.

ஸ்ரீ கிருஷ்ண லீலாதரங்கிணீ ஓர் அதிசய காவ்ய நடையைச் சேர்ந்ததாகும். அதாவது இது த்ருச்ய, ச்ரவ்ய காவ்ய வகையைச் சேர்ந்தது. ஏனெனில் இதில் கத்யம், பத்யம் கீர்த்தனை முதலியவைகள் அடங்கியுள்ளன. ஆகையால் இதை நாட்டிய நாடகமாகவும், நாடகமாகவும் நடித்தும் காட்டலாம். இது லகு காவ்ய வகையில் சேர்ந்தது. இதன் கதா பாகத்தை ஸ்ரீ தீர்த்தர் முகவுரையாகக் கூறிவிடுகிறார். முதல் தரங்கத்தின் 10 ச்லோகத்தில் " ஆதௌ கிருஷ்ணவதார: " என்று ஆரம்பித்து " கோகுலே கிருஷ்ணகமனம் துர்காயா: மதுராகம: । கதாயாஸ் ஸங்க்ர ஹஸ்த்வேவம் சரித்ரேஸ்மிந் நிகத்யதே " என்று முடிக்கிறார். இதில் பாகவத பத்தாவது ஸ்கந்தக் கதை காணப்படுகிறது, பன்னிரண்டு தரங்கங்கள் கொண்ட இக்காவ்யம் ஸ்ரீ ருக்மிணீ கல்யாணத்துடன் முடிகிறது, இவரும் ஜயதேவரைப் போல முதலில் பத்து அவதாரங்களைக் கூறுகிறார், பத்தாவதாரத்தை இவரும் ஒப்புக் கொண்டுள்ளார் இவர் மகா சிவபக்தர். இவர் ஒவ்வொரு கிருதியின் முத்திரையில் " சிவ நாராயண தீர்த்த " என்று கூறுகிறார். " தீர்த்த " என்ற பதம் " பரமஹம்ஸ " என்ற பிருது போல் மேன்மையானது. இவர் கிருதிகள் ஒவ்வொன்றும் லலிதமாகவும், பக்திச் சுவைத் ததும்புவதாகவுமுள்ளன. எல்லோரும் பாடத் தகுந்தது. இப்பொழுது வழங்கும் பிரஸித்தராக தாளங்களிலமைத்துள்ளார். இது பக்தி காவ்யத்தில் மிகவும் சிறந்தது. ஸ்ரீ நாராயண தீர்த்தரின் ஸ்ரீ கிருஷ்ண லீலாதரங்கிணீ பாகவத ஸம்ப்ரதாயத்தில் முக்ய இடம் பெற்றுள்ளது.

---